எந்நூலுக்கும் இந்நூலே மூலம்

# "கடவுள்"



உலக சமாதான ஆலய ஸ்தாபகரும்
பரிபூரண பரஞ்சோதியின் உயர் ஞான
சபையின் குருபிரானுமான
"ஞான வள்ளல் பரஞ்சோதி மகான்"

எந்நூலுக்கும் இந்நூலே மூலம்

# கடவுள்

(மூன்றும் பதிப்பு)



உலக சமாதான ஆலய ஸ்தாபகர்
ஞானவள்ளல் பரஞ்சோதி மகான்
அருளியது.



பரிபூரண பரஞ்சோதியின் உயர்ஞான சபையோரால்
வெளியிடப்பட்டது.

எவ்வளவு நூல் ஆராய்ச்சியாளர்களாயினும், எவ்வித யோக அப்பியாசிகளாயினும், இங்கு தன்னிலை விளக்கமும் தன் குண்டலியின் சக்தியால் உணர்வின் பேரின்ப சுகமும் நேரில் வந்து சிரமமின்றி பெற்றுக் கொள்ளவும்.

உணர்விருந்தால் மரணமில்லை.

ஞான வள்ளல் பரஞ்சோதி மகான் அவர்கள் அருளிய எந்நூலுக்கும் இந் நூலே மூலம் "நான்" என்னும் நூல் தமிழிலும், ஆங்கிலத்திலும் கிடைக்கும்.

உலக சமாதான ஆலயம்
299, திருவொற்றியூர் ஹைரோட்,
[illegible] புது வண்ணாரப்பேட்டை,
சென்னை 21.

T. S. தேவராஜ்,
காரியதரிசி.

5-1

# கடவுள்

---

கடவுளைத் தவிர்த்து வேறொரு பொருள் இல்லாத தால், வேறொரு பொருள் ஒன்று இருந்து அதை எடுத்து கடவுள் எல்லாவற்றையும் படைத்தான் என்ப தில்லை. எல்லாமாகப் பரிணமித்திருப்பதே கடவுள்.

## உலக தத்துவம்

எங்கும் பூரணமான இருட்டில் ஒன்றுமில்லாது ஓர் அணுவாயிருந்த கடவுள் என்ற ஆதி, நான் என்ற துணி கரமாகி வியாபகத்தில் நினைப்பாகி, வேகத்தில் சப்தமாகி, உருவத்தில் நெருப்பாகி, என்றென்றைக்கும் குறைந்திடாப் பெருக்கம் கொண்ட, அந் நெருப்பின் பொரிகளே அணுக்களாகி எங்கும் நிறைந்த இருட்டில் அவ்வணுக் களே வேகமாகப் பரவி அவ்வேகங் குறைந்ததும், அங் கங்கு அவ்வணுக்களின் இயல்பால் ஒன்று சேர்ந்து, அச் சேர்க்கையால் சுழலுதல், விலகுதல், உருளுதல், புரளு தல், அடங்கிய ஆகர்ஷண சக்தியுள்ள நட்சத்திர, உலக, பூமிகளாகி, அணுக்களே அணுக்களுக்கு வாகனமும் உணவுமாகி, அதனால் ஜீவனின் வளர்தல், நகர்தல், நடை, ஓட்டம் யாவுமாகி, தாவரம் மற்ற உருவங்கள் உட்பட, ஸ்பரிசமும், தோற்றமும் உள்ள ஜீவராசிகளாகி, மனிதர்க ளாகி, சுவை, நோவு, இன்பம், இவைகளில் சூக்கும மாகி அம்மனிதர்களில் அநேக காரியங்களால் உள்ள அனுபோக காரணத்தால் பேச்சாலும் யூகத்தாலும் அறிவு உயர்வாகி, அதனால் பக்தி, யோக ஆராய்ச்சிகளாகி, முடிவில் தன்னைத் தான் அறிந்து இவைகள் யாவும் தன் பரிணாம வேக விளைவாகவே இருப்பதை விளக்கமாக அறிந்து கொள்வதே ஞானமாகும். இதுவே உலகங் களின் தத்துவம்.

எப்பொருளையும் எடுத்து, ஆராய்ந்தீர்களானல், இருள்—துணிபு—வியாபகம்—சப்தம்—வெளிச்சம்—அணுக்கள் இவையாவும் பிரிக்க முடியாது ஒன்று சேர்ந்து இருப்பதை அறியலாம். இதை அறியாதபோது கடவுள் ஒருவன் தனியாக இருக்கிருன் என்று தேடவும் சொல்லவும் வேண்டியதாய் இருந்தது.

## இயற்கை சேர்க்கை.

அணு இயற்கை, அணுக்களின் சேர்க்கையே எல்லா உருவங்களும்.

வெட்ட வெளியாயுள்ள அணு மயமே உருவங்களாகி, அவ்வுருவங்கள் அழிந்த பின்னர் முன்னுள்ளபடி அணு மய மாகிய வெட்ட வெளியாகி விடுகிறது.

உலகத்திலுள்ள எல்லா அனுபவங்களும் உருவங்கள் உண்டாகி அவ்வுருவங்கள் அழியும் வரையுள்ள இடைக் காலத்தில் மாத்திரமே உள்ளது. இதில் மனிதர்களுக்கு அனுபவ அறிவு ஏற்பட்டு அதில் அதிக துன்பமோ அல்லது மித மிஞ்சிய இன்பமோ ஏற்பட்டதின்பின் இவைகட்கு காரணம் அறிய முற்படுகிருர்கள். இதில் சிலர் யூகத்தாலும், பல உப கருவிகளைக் கொண்டும் முற்படுவதும்; மற்றும் சிலர் தவத்தாலும் அநேக வித யோகத்தாலும் முற்படுவது மாகும்.

அணுக்களின் கூட்டுறவுகளாயுள்ள உருவங்களின் தடிப்புகளும், சப்த அலைகளின் பேதங்களும். புலன்களும் செயல்களும், நிர்வாகங்களும், ஒரே பொருளினின்றும் உண்டாகி இருந்தும், அநேக விதமான வித்தியாசங்களாகவும் அதிகமாகவும் பெருகி இருப்பதால் இதைப் பற்றி ஒரு மனிதன் தன் ஆயுள் உள்ளவரை ஆராய முற்பட்டாலும், எல்லா தத்துவ ஆராய்ச்சியும் எதார்த்தமாகக் கண்டு பிடிக்க முடிவதில்லை.

அதனுல் இது வரை உலகில் ஒருவருக்குப் பின் ஒருவராக ஆராய்ந்து ஒவ்வொன்றையும் கண்டு பிடிக்க வேண்டியதாயிற்று.

இதிலும் இயற்கைக்கு மேல் ஒன்று இருப்பதாகக் கற்பித்துக் கொண்ட கற்பனை வாதிகள், இயற்கை தத்துவத்தைக் கண்டு பிடித்தோர்கள், என இரண்டு வகை உண்டு.

இவ்விரு தரப்பார்களில் இயற்கைத் தத்துவ ஞானமுடையோர், கற்பனைக் குள்ளாகி தன்னில் தான் குறைபடுவோர்களும் இயற்கைக்கு மேல் ஒன்று உள்ளதாகக் கற்பித்துக் கொண்டுள்ள கற்பனை வாதிகளையும் உலக மக்களுள் பெரும்பாலோர் போற்றினாலும், அவர்களுக்கு இயற்கைத்தத்துவ விளக்கம் விளங்காதவரை தன் அறிவில் பெருங் குறைவாகவே இருப்பார்கள்.

ஆகையால் அறிவாளிகளே! இயற்கைத்தத்துவமும் கற்பனையின் காரணத்தையும் இவ்விரண்டையும் ஒருவர் விளக்கமாக அறிந்தாலே சலனம் சந்தேகமில்லா பெருந் தன்மையோடு நிம்மதியடைய முடிகிறது.

அணுக்களின் கூட்டுறவின் ஏற்றத்தாழ்வே
உருவங்களின் பலதோற்றம்
தொழில் அநுபோக யூக வித்தியாசமே
அறிவின் பாகுபாடு.
சப்த அலையின் வித்தியாசமே, பாஷை மந்திர
வேதாந்தங்களின் பேதா பேதம்.
ஒரு பொருளே பல பொருளாய் பரிணமித்திருப்பதை
அறிந்து கொள்வதே தன் அறிவின் நிம்மதி.
உடல் சுகாதார அழகோடும்
நடத்தை ஒழுக்கச்சிறப்போடும்
உள்ளம் பரிசுத்த உற்சாகத்தோடும்
அறிவு தந்நிலை பிரகாசத்தோடும்
இருப்பதே மனித ஈசன் நிலை.

## வெகுகாலயுகங்களாய் ஆராய்ந்ததின் முடிவு:ஸ்தூல சூக்கும காரண சரீரங்களின் உண்மை

ஸ்தூல சரீரங்கள் ஏற்படுவதற்கு முன் எவ்வுருவங்களுக்கும் சூக்கும சரீரமோ, காரண சரீரமோ யில்லை. உருவங்கள் ஏற்பட்ட பின் ஒன்றுக் கொன்று எதிர்ப்பட்டு ஏற்படும் பார்வைகளினாலும் ஒன்றோடொன்று ஐக்கியப் படுவதினாலும் அதனால் ஏற்படும் அனுபோகத் திறமைக்

குத் தக்கவாறு ஒரு உருவத்திற்கு மறு உருவங்கள் மேலாகவும் சீர்திருத்தமாகவும் உண்டாகுவதும் உண்டாகவும் உண்டாக்கவும் யூகிப்பதுமாகும்.

உருவங்கள் ஏற்படுவதற்கு முன் தனி அணுமயத்தைத் தவிர எந்த ரூபமும் காரண சரீரமாகவும் சூக்கும சரீரமாகவும் ஆவதில்லை.

உதாரணம் :—அக்கினியிலிருந்து (5) அணுக்களாகப் பிரிந்து வருவதற்கு முன்னதாகவே ஏற்படப் போகும் உருவங்களைப் போல ரூபங்களாயிருந்து அந்த உருவங்களின் செயல்களால் உள்ள அனுபோகப் பதிவுகளால் அறிவு ஏற்பட்டிருந்து அந்த அணுக்கள் வருவதுமில்லை. ஆதலால் காரணம் (9) என்ற அறிவும், அதன் பிரதிபலிப்பான சூக்குமமும் (11) ஏற்பட இடமில்லை. அவன் எழுந்தான், ஓடினான், அமர்ந்தான், தூங்கினான் என்பதுபோல அணுக்களின் சேர்க்கையால் உள்ள உருவத்தில் ஏற்படும் செயல்களுக்குத் தக்கபடி துணிவு, சப்தம், வெப்பம், வெளிச்சம், கானல், நீர், மண், காற்று, ஸ்தூலம், சூக்குமம், காரணம், என்றும்; மூக்கு, காது, கண், யூகம், புலன் கூடுதலுக்குத் தக்கவாறு ஓரறிவு, ஈரறிவு, ஐயறிவு, ஆறறிவு என்றும் எவ்வகையிலும் சரீர பரிசம் சுகமாய் இருப்பது இன்பம் என்றும், பரிசங்களுக்கு ஏற்படும் தடைகளால் உள்ள நோவு கவலைக்குத் துன்பம் என்றும், எல்லா நிர்வாகங்களும் யாதொரு தடையில்லாமல் விபரமாக நடக்க வேண்டிய குறிப்புக்காக, பாஷை, எழுத்து, படிப்பு, உத்தியோகம், பதவி, கிழமை, வாரம், மாதம், வருஷம், கிழக்கு, மேற்கு, திசைகளாகவும் தொழில் உருவங்களுக்கு ஏற்ற பெயர்களும், எளிய மக்கள் வாரத்திற்கு, மாதத்திற்கு, வருஷத்திற்கு ஒரு முறையாவது அவர்கள் வசிக்கும் இடங்களையும் சுத்தம் செய்து, நல்ல உணவு, உடை, உண்டு, உடுத்தி சந்தோஷங் கொண்டாட விடுமுறை நாள் என்றும், அனுபோக அறிவு நிறைவுக்குத் தக்கவாறு குணம், மனது, புத்தி, ஆராய்ச்சி, அறிவு, பேரறிவு என்றும், உருவத்தில் அனுபோக அறிவு பயன்படக் கூடிய திறமைக்குத் தக்கவாறு ஜீவன், ஜீவாத்மா, பரம ஜீவாத்மா என்றும் பெயர்கள் ஏற்பட்டது.

உதாரணம் :—மழை பெய்த குளிர்ச்சியால் சுகம் அல்லது ஜுரம் ஏற்பட்ட தென்பதில் மழை ஸ்தூலம்: குளிர்ச்சி சூக்குமம்: சுகம் அல்லது ஜுரம் காரணமுமாகும்.

உணவு உயர்வு விரும்பேன்
உயர் உடை விரும்பேன்
உடல் சுகம் விரும்பேன்
உலகப் புகழ் விரும்பேன்
நீ யசர் என்றறிய விரும்பிய
ஊக்கத்தால் தன்னிலை அறிந்தவன் யான்;

அறிவின் கூர்மையினுல் க்ஷணத்தில் தன்னிலை ஞானம் அடையலாம் பேரின்ப சுகம் நன் குண்டலினியால் இன்பிக்கலாம்.

## பேய், தேவர்களின் தோற்றம்

சரீரங்களின் பக்குவத் திறமைக்குத் தக்கவாறு புலன்கள் உண்டாகி கடைசியாக மனித சரீரங்களாகி வெகு காலத்திற்குப் பின் அம்மனிதருக்கு வேண்டிய அனுபோகத்திற்கு உணவு உடை தொழில் சுகாதார இடவசதி இவைகள் கிடைக்காத துன்பத்தால் வருந்திய எண்ணத்தின் ஏக்கவலிவு உடையோர்கள் இறந்த பின் வான வெடிகள் வெடித்து பின்னர் அவைகளின் புகை சிறிது நேரம் இருந்து மறைவது போல் அவர்கள் எண்ணத்தின் ஏக்கம் பிரதி பலிப்பது சூக்கும வடிவு பெறுகிறது. அது நீலநிறம் போன்ற மிக சிறிய நிழலைப் போல் லிங்க சரீரமாக அல்லது பேய் (13) உடலாக விலகி நிற்பதுவும் அறிவு விளக்கம் உடையோர் இறந்த பின் அவர்களது எண்ணத்தின் பிரதி பலிப்பு சிறு வெண்மையான சூக்கும சரீரமாகவும் விலகி நின்று, இவைகளும் சில நாள் வரை இருந்து பின் அணுமயமாகி விடுகின்றது. ஆகையால் இவற்றின் உண்மை நிலை நன்ருக அறிவுக்கு விளங்காத போது பிராணயாம அப்பியாசத்தால் உந்தியிலிருந்து நெற்றிவரையுள்ள ஆறுதாரத்தில் படிப்படியாய் சக்கரங்களும் மலர்களும் வர்ணங்களும் தம் அறிவின் நம்பிக்கையில் மனக் கண்ணுக்கு புலப்பட்ட போதிலும், அதை

நன்ருய் கவனித்து ஆராய்ந்தபோது தன் விசுவாச எண்ணத்தின் வலுவால் அது தோன்றியதே தவிர்த்து அங்கு ஒன்றும் இல்லை என்று, அறிவுக்கு விளங்குவது போல், பக்தியோக தவங்களின ஆராய்ச்சியின்முயற்சியில் சூக்கும சரீரங்களாக நம் சிலருக்கு அறிவுக்குப் புலப்பட்டபோது* அவற்றை தேவர்களென்றும், பேய்களென்றும் காரண சூக்கும சரீரங்கள் ஏற்பட்டதின் பின் ஸ்தூல சரீரங்கள் ஏற்படுவதாகவும் சொல்ல வேண்டியிருந்தது. எதையும் பல தடவைகள் அனுபவித்து அதை அடிக்கடி ஆராய்ந்து வந்தபோது அதன் முடிவு அல்லது உண்மை தெளிவாக விளங்குகிறது. உணர்வின் இன்பத்தால் அல்லது குண்டலியின் (93) தவத்தின் பேரின்பத்தோடு பதிஞெரு வருஷம் ஆராய்ந்த முடிவு இது.

காட்டை விட்டேன், வீட்டைவிட்டேன்
என் பெயரையும் விட்டேவிட்டேன்
ஊரை விட்டேன் உற்ருர் உறவினரை விட்டேன்
என் சமயத்தையும் விட்டேவிட்டேன்
பெறுவதும் விட்டேன் பிறப்பதும் விட்டேன்
நான் பிணமாவதும் விட்டே விட்டேன்
என்.இஷ்டப்படி இருப்பேன் என் அம்பலத்தில் அமர்ந்ததால்
என் விருப்பத்தில் நான் இரண்டறக் கலப்பேன்.

## பிறவி, மறு பிறவி; சொர்க்கம், நரகம் இவைகளைப் பற்றிய உண்மைகள்

ஸ்தூல சூக்கும காரண சரீரங்களில் உண்மையும் பேய், தேவர்கள் தோற்றத்தின் உண்மையையும் அனுபவித்து ஆராய்ந்த முடிவில் தெரியும் உண்மை என்னவென்ருல் அணுக்கள் கூடி உருவாகுமுன்னும் உருவாகி பிரிந்த பின்னும் அணுக்களின் அம்சம் வெட்ட வெளியாகவே இருக்கிறது. அவ்வணுமய வெட்ட வெளியில் உலகில் உருவாகுமுன் இன்னின்ன உருவாகி இன்னின்ன நிருவாகம் நடத்த வேண்டுமென்ற எண்ணமு

---

* பயத்தின் பிரதிபலிப்பே பேய். நல்லறிவு துணிவுள்ளவர்களுக்கில்லை பேய், மந்திரம், வணக்கம், பணிதல்.

மதிலிருப்பதில்லை. உருவாகி அவ்வுரு பிரிந்தபின் அல்லது அழிந்த பின்னும் இன்ன உருவத்திலிருந்து இன்னின்ன செயலிலிருந்தோமென்ற எண்ணமு மங்கிருப்பதில்லை.

பெய்யுமழை பூமியில் விழுமுன் எவ்வித மாற்றமு மில்லை பூமியில் பட்டபின் அங்கங்கு சேரும் தன்மைக்குத் தக்க நிறம், நாற்றம், மணம், சுவை அநேக விதங்களாக மாறுகிறது. அது பின் வெப்பாகி ஆவியாகிய மேகமாகி பின் பெய்யும் மழையில், முன்னுள்ள நிறம், நாற்றம் மணம் சுவையாகப் பெய்வது இல்லை. அதுபோல் எந்த உயிரும் இறந்தபின் மறுசரீரம் எடுப்பதே இல்லை. ஒரு மரத்தின் வித்துக்களால் அநேக மரங்கள் உண்டாவதைப் போல், மனிதன் இறக்குமுன் அவன் விந்துவால் பல குழந்தைகள் உண்டாகின்றன: ஒரு மனிதன் உயிருள்ள போது அவனது செயலும் எண்ணமும் நல்லதாயிருந் தால் அவன் தன் சரீர நலத்திற்கு பயனபடுவதோடல்லா மல் அவன் ஒருவனுல் பல மக்களும் நற்செயல் நல் லெண்ணத்தின் உணர்ச்சி தரக்கூடிய பயன் ஏற்படுகிறது. இதை தவிர்த்து உயிருள்ளபோது செய்த செயல்களுக் காகவும் அவன் எண்ணிய எண்ணங்களுக்காகவும் மறு பிறவி உலகில் எடுத்து நன்மை தீமைகளுக்கு ஏற்ப கஷ்ட ங்களோ, சுகங்களோ அனுபவிப்பது என்பதேயில்லை.

உதாரணம்:-அப்படி இல்லாததால் வியாச்சிய கோர்ட்டு களும் (33) வேதாந்த விசாரணை ஸ்தாபனங்களும் வைத்திய சாலைகளும், பக்தியோக ஆலயங்களும் இருப்பதோடு யுத்தத்தில் சேர்ந்த ஒருவன் குடி விபசாரத்தோடு அநேகரை செய்ய ஒண்ணுத அட்டூழியங்களைச் செய்து வெகு பேர்களைக் கொலை செய்தோனை பெரும் வீரன் என்ற பட்ட பதவி சூட்டி வெகுமதி அளிப்பதும் சாதாரணமாக ஒருவன் ஏதோ காரணத்தால் கொலை செய்துவிட்டால் அவனை கொலைக்காரப்பாவி, பாதகன், பெரும் துரோகி என்பதோடு தூக்கு தண்டனை இவைகள் ஏற்பட காரணமே யில்லை.

இவ்வுலகில் மறு பிறவி எடுக்காது அவன் உலகில் செய்த நன்மைகளுக்காக சொர்க்க லோகத்தில் சுகமான விமோசனத்தில் இருப்பதுமில்லை. அவன் செய்த தீமை களுக்காக நரக லோகத்தில் துன்பப்படுவது மில்லை.

செயல் எண்ணங்களிலும் பாகுபாடு உள்ள மனிதர்களுக்கு மோட்சம் உண்டு என்று நம்பினுல் எவ்வித எண்ணத்தின் வலுவு இல்லாது உழைப்பு, உணவு, தூக்கம், போகம் காலக் கிரமப்படி இயற்கையாக வாழும் பறவை மற்ற ஜீவராசிகளுக்கு நம்மை விட உயர்வான மோட்சத்தில் அவைகள் தங்க வேண்டும். ஆகையால் மோட்சம் (64) நரகம் என்பது தனியாக இல்லை.

மோசமும் மோட்சமும் ஒன்றே
கருவும் குருவும் ஒன்றே
ஆதியும் மனிதனும் ஒன்றே
அறிவின் பெருக்கத்தில் நீங்களும் நானும் ஒன்றே.

தூக்கத்தில் கண்ட கனவையும் எழுந்து ஆராய்ந்து அறிய ஸ்தூலம் வேண்டியிருக்கிறது. ஆகையால் ஸ்தூல லோகத்துக் கப்பால் இருக்கும் அணுமயத்தில் பரலோகத் தீர்ப்பு நாள் என்பதே இல்லை.

பறக்கும் விமானமும் ஸ்தூலமும் இருந்தால்தான் சுகமாய்ப் பறந்து வந்தேன் என்று ஒருவன் சொல்ல முடியும். அதுபோல் துக்கம், இன்பம், தீர்ப்பு என்பவை செயலிலுள்ள விஷயங்கள். செயலுக்கு அணுக்களின் சேர்க்கையுள்ள சரீரமும், சரீர லோகமும் இருந்தாலே முடியும். அவ்வாறில்லாமல் சரீர லோகத்திற்கப்பால் யாவும் அணுமயமாகி விடுவதால் அணுமயத்தில் செயலில் அல்லது ஸ்தூலத்திலுள்ள விஷயம் எதுவுமில்லை. எல்லா சரீரமும் எல்லா உயிர்களும் இறந்தபின் அணுக்களாகி விடுகின்றன. எந்தச் செயலும் எண்ணமும் அப்போதைக்கப்போது அணுக்களின் அலைகளால் எவரையும் பிரதி பலிக்கக்கூடியதாயிருக்கிறது.

அரூபத்தால் ரூபமும் ரூபத்தால் காரிய செயலும், காரியத்தால் காரணமுமாகும்.

சிறு தண்ணீரை பெரும் நெருப்பு ஐக்கியப் படுத்துவதும், அதிக தண்ணீர் சிறு நெருப்பை ஐக்கியப் படுத்துவதும்போல்; தீய செயல் எண்ணமுடையோர்கள் பெரும்பாலோர் உலகில் இருந்தால், நற்செயல் எண்ணமுடையோர்களும் கெட்ட செயலுக்கும் எண்ணத்திற்கும்

ஆளாகிருர்கள். நல்ல எண்ணம் நற்செயல் உடையோர் கள் பெரும்பாலோர்கள் உலகில் இருந்தால் தீய செயல் எண்ணமுடையோர்கள் தம் செயல்களை உணர்ந்து நல் வழிக் காளாகுவார்கள். ஆகையால் மனிதர் உயிருடன் இருக்கும்போது செய்யும் நன்மை பொது மக்களுக்கு பெரும் நன்மையே உண்டாகும். இறந்தபின் அவர்களின் நற் செயலின் பிரஸ்தாபத்திற்குத் தக்கவாறு சில காலம் வரையில் உயிருள்ள மக்கள் அவரை ஞாபகிக்கும் எண் ணத்தின் வலுவின் பிரதிபலிப்பால் நலன் தருகிறது.

பத்தாயிரம் மக்கள் கூடிய கூட்டத்தில் ஒரு கவிஞர் பாடும் குரலுக்குத் தக்கபடி அப்போதைக்கு அப்போது சோகம், சாந்தம், கோபம், இரக்கம், வீரம், பேரின்பம் இவைகளின் உணர்ச்சி அங்கு கூடியிருக்கும் எல்லோருக் கும் உண்டாகுவது போல் உலகில் ஒவ்வொருவரும் தமது வாழ்க்கையில் நன்னடத்தையுடன் ஒழுக்கமாகப் பேசி, எண்ணி, வாழ்வதே அவர்களது சொந்த நலத்திற்கும் உலகப் பொது மக்களின் நன்மைக்கும் சிறப்பான உதவி யாகும்.

உலக அறிவாளிகளே! உலகத்தில் இதுவரை கடவுள் (59) உண்டு என்போரும், இல்லை என்போரும்; மோட்சம் நரகம் உண்டு என்போரும் இல்லை என்போரும்; பிறவி உண்டு என்போரும், இல்லை என்போரும் நாளுக்கு நாள் அதிகமாகவே கூடிய போதும் அறிவுக்கு விளக்கமாக அப்பிரச்சனைகள் முடிவடையாது வெறும் நம்பிக்கையுடன் இருந்து வருவதோடு, இப்பிரச்சனை யின் முடிவறிவதற்காக உலகத்திலுள்ள பல ஆயிரம் மக் களுக்குப் பயன்படக் கூடிய சேவையில், இருந்த பெரும் ஆராய்ச்சியாளர்களில் அநேகர் அச்சேவையை விட்டு இப்பிரச்சனையில் ஈடுபட்டார்கள்.

எவ்விதக் குறைவு மில்லாமல் எல்லா வித சுக அனு போகத்தில் இருந்தோர்களும், இவைகளுக்கெல்லாம் காரணம் எதுவாய் இருக்கும் என்ற ஆராய்ச்சி ஏற்பட்ட வுடன் தன் சுகபோகங்களை எல்லாம் விட்டு விட்டு ஞானம் தேடியோர்கள் வெகு சிலர். தன் தன் உடல் அனுபோகங் களுக்கு கஷ்டங்கள் ஏற்பட்டபோது அதைத் தீர்த்துக் கொள்ள ஞானம் தேடியோர்கள் அநேகர்.

குற்றம் உண்டு என்போரும் அதிக குற்றங்கள் செய்து அவர்களால் மக்களுக்கு அதிக தீங்குகளும்; குற்றமே இல்லை என்போர் சிறு குற்றங்கள் செய்து விட்டாலும், அவர்களின் ஆயுள்வரை அதைப் பெரிதாக தன் எண்ணத்தின் வலுவில் தம்மைக் குறைவாக எண்ணி மன்னிப்புத் தேடி மாண்டோர்களும், இதுவரையுள்ள உலக நடைமுறையில் இருந்து வருகிறது.

மனிதன்:—மற்ற ஜீவராசிகளுக்கும் மனிதனுக்குமுள்ள வித்தியாசம் என்னவென்றால் அநேக அனுபோக வாயிலாக நிர்வாகம் செய்வதில் அறிவு யூகம் உயர்ந்து யிருப்பதே மனிதனின் உயர்வாகும். சரீரத்திற்குப் பின் எதற்கும் முடிவு ஒன்றே. இதற்காக வேண்டியே தான் அநேக பிரசங்கங்களில் மனிதனுக்கு மனிதன் என்ற பெயரை மாற்றி கடவுள் என்று அமையுங்கள். எல்லா நிர்வாகங்களும் யூகமாகவும் பெருந்தன்மையாகவும் நடக்குமென்றே சொல்லி இருக்கிறேன்.

## மனிதனின் உயர்வு

1. செய்திகளைப் பறந்துகொண்டு பேர்வதில் உயர்ந்தது புரு. ஒருவருக்கொருவர் எண்ணிய எண்ணத்தால் எல்லையற்ற தூரத்தில் இருப்பவரை ஞாபகத்தை ஊட்டுவதில் உயர்ந்தவன் மனிதன்.

2. தந்திரத்தால் உயர்ந்தது நரி. தாரதம்மியத்தில் உயர்ந்தவன் மனிதன்.

3. நன்றியில் உயர்ந்தது நாய். நன்றி மறவாது நன்நடத்தையில் உயர்ந்தவன் மனிதன்.

4. நின்றநிலையில் உயர்ந்தது மரம். நீதிநிலையில் உயர்ந்தவன் மனிதன்.

5. கண் பார்வையில் உயர்ந்தது கருடன். கண்ணோட்டத்தில் உயர்ந்தவன் மனிதன்.

6. தன் மலத்தை மறைப்பதில் உயர்ந்தது பூனை. தன் துர்க்குணத்தை உணர்ந்து உயர்ந்தவன் மனிதன்.

7. பாய்ச்சலில் உயர்ந்தது சிங்கம். பலத்தையும் அறிந்து உயர்ந்தவன் மனிதன்.

8. ஜீவ உருவத்தில் உயர்ந்தது யானை, பாம்பு, மீன். எதையும் அடக்கி ஆளும் ஆயுத அறிவில் உயர்ந்தவன் மனிதன்.

9. ஆடல் அழகில் உயர்ந்தது மயில். உடை ஒழுக்கத்தில் உயர்ந்தவன் மனிதன்.

10. கூவுதலிலும், கொஞ்சுதலிலும் உயர்ந்தது குயில், கிளி. சொல் அன்புக்குரலில் உயர்ந்தவன் மனிதன்.

11. ஜோடிப் பிரியாததில் உயர்ந்தது அன்றில் பட்சி. குடும்ப பிளவு இல்லா வாழ்தலில் உயர்ந்தவன் மனிதன்

12. ஊரில் உள்ள வியாதிக்காக கவலையில் உயர்ந்தது கழுதை. அதை அறிந்து மருந்தால் தவிர்ப்பதில் உயர்ந்தவன் மனிதன்.

13. எதிரில் இருக்கும் அபாயத்தை அறிவதில் உயர்ந்தது குதிரை. அபாயத்தை நீக்க ஜெபிப்பதில் உயர்ந்தவன் மனிதன்.

14. சுறுசுறுப்பிலும், பாதை உண்டாக்குவதிலும் உயர்ந்தது எறும்பு. எல்லோருடைய மேன்மைக்கு நீதி சட்டத்தை வகுப்பதில் உயர்ந்தவன் மனிதன்.

15. கூடு கட்டுவதில் உயர்ந்தது தூக்கணாங் குருவி, குடிசை மாடமாளிகை கூடகோபுரம் வாராவதி கட்டுவதில் உயர்ந்தவன் மனிதன்.

16. உலகத்தைச் சுற்றிவருவதில் உயர்ந்தது அக்கா குருவி. (cuckoo) குறிப்பிட்ட நாளில் சுற்றிவந்து செய்தி சொல்வதில் உயர்ந்தவன் மனிதன்.

17. அசுத்தத்தையும், சுத்தத்தையும் உண்டு உருவளர்வதில் உயர்ந்தது பன்றி. அசுத்தத்தை நீக்கி சுகாதார முறையில் உயர்ந்தவன் மனிதன்.

18. புழுவை மாற்றி தன் உருவமாக்குவதில் உயர்ந்தது குளவி. அனுபோக அறிவை மக்களுக்கு உண்டாக்குவதில் உயர்ந்தவன் மனிதன்.

*19.* உடம்பின் தன் விகாரத்தை மாற்றி நகர்ந்ததை விட்டு அழகான வண்ணாத்திப் பூச்சியாய் (Butterfly), பறப்பதில் உயர்ந்தது கம்பளிப்பூச்சி தன் விகாரவிவகார எண்ணங்களைவிட்டு சந்தேகமில்லா தன் நிலையில் அமர்வதில் உயர்ந்தவன் மனிதன்.

*20.* வயதில் உயர்ந்தது தேரை. இருக்கும்வயதில் எல்லாம் அறிந்து நீதியாய் அனுபவித்து போவதில் உயர்ந்தவன் மனிதன்.

எப்பொருளும் எச்செயலும் அந்தந்த இடங்களுக்கும் நேரங்களுக்கும் அது உயர்வே.

எப்போருளையும் எச்செயலையும் அந்தந்த இடநேரங்களில் பொது நீதியாக அனுபோகிக்கும் அறிவில் உயர்ந்தவனே மனிதன்.

அவரவர்களின் கருத்து அவரவர்களுக்கு அக்காலத்திற்கு அது உயர்வே.

எக்கருத்தானாலும் அக்கருத்து எல்லாதேச பொது மக்களுக்கும் பயன்படக் கூடியதாய் இருந்தால் எக்காலத்திலும் அக் கருத்து நிலைக்கும்.

எண்ணம், செயல் சொல்
இம்மூன்றும் சீராய் இருப்போரே
ஜெகத்தின் ஈசன்,

உலகத்தில் ஜனித்ததின் பயன் உடல் இருக்கும்போது
அனுபவிக்கும் அனுபவங்களைத் தவிர்த்து
ஜனிக்கும் முன்னும், செத்ததின் பின்னும்
இல்லை, இல்லை எதுவும் இல்லை.

ஓ பேப்பர் ஆசிரியர்களே!

உங்களுடைய பேனா முனையினால் உலகத்தை நாசமும், நேசமும் செய்யலாம்.

நாசத்தை விரும்பாது, நேசத்தையே விரும்பி எழுதுங்கள்.

உலக நல்லடியார்களே!

உங்களின் அன்பான சொல் முனையால் எவரையும் சாந்தத்தையும் சமாதானத்தையும் விளைவிக்கலாம். நீங்கள் நல்பார்வையுடன் பெருந் தன்மையாய் பேச முற்படுங்கள்.

ஓ வீரர்களே! ஆராய்ச்சியாளர்களே!

விவேகிகளே!

உங்கள் நெற்றிக்கண் சுழி முனையால் வீரமும், விவேகமும், பேரின்பமும் அடைய வாரீர்! நீங்கள் எதிலும் சீர்திருத்த வாதியாயிருந்து, உலகிலுள்ள சிரமத்தைப் போக்க முற்படுங்கள்.

சந்தோஷ மனப்பான்மை சகலருக்கும் பொது,
எதார்த்தத்தால் எங்கும் சிறப்பு,
அறிவின் தெளிவே அமைதி,
உணர்வால் உயர்நிலை.

எல்லோருக்கும் முடிவு ஒன்ருய் இருக்கும் போது அவனவன் செய்யும் செயல் எப்படி இருந்தாலும் ஏன் அதற்கு போதனை வேண்டிய தவசியம்?

ஏனெனில் வைத்தியரும் வியாதியஸ்தரும் சாகாமலிருக்கப் போவதில்லை. உடலிருக்கும் வரை வியாதியில்லா சுகத்துடனிருக்க மருந்தும் வைத்தியரும் அவசியம் போன்று; எல்லோரும் எத்துறையிலும் சீர்திருத்தமாக வாழ்ந்து சிரமத்தை தடுத்துக் கொள்ள வேண்டியதற்கே போதனை.

அன்பு:—உணவு, உடை, தொழில், இடவசதி, அறிந்த அனுபவங்களை ஒருவருக் கொருவர் பங்கிட்டுக் கொள்ளும் தன்மையின் உயர்வின் விளைவே அன்பு.

எண்ணத்தின் ஏக்கம்:—சரீர சிரமத்தை போக்கிக் கொள்ள பசி, தூக்கம், போகம் இவைகளே உலக இயல்பின் இயற்கை. இதைத் தவிர்த்து மற்ற எண்ணங்கள் ஏக்க மெல்லாம் நாளடைவில் சேர்க்கையால் நேர்ந்ததேயர்கும்:

உலக அறிவாளிகளே! நீங்கள் ஒருவனை நினைத்த மாத்திரத்தில் அவன் வெகு ஆயிர மைலுக்கப்பால் உள்ள துலையில் இருந்தாலும், அவன் அதே க்ஷணத்தில் உங்களை நினைக்கிறான். அதற்குக் காரணம்: எங்கும் நிறைந்து இருக்கும் மனிதனின் (2) நினைப்பின் வியாபகத்தில் தன் எண்ணத்தின் வேகம் (35) நொடிக்கு 20,000 மைலுக்கப்பால் போகக் கூடியதாய் இருக்கிறது. ஆகையால் சொர்க்கம், நரகம், பிறவி என்னும் அவசியமற்ற போதனைகள் போதித்து வீண்பாரம் உலக மக்கள் எண்ணத்தில் ஊட்டாதபடி, செயலாலும் எண்ணத்தாலும் உள்ள நன்மை தீமைகளை விளக்கமாக அறிவிக்க வேண்டும். அப்போது அவரவர்கள் செய்யும் செயல்களிலும் எண்ணும் எண்ணங்களிலும் அப்போதே தன்னலத்திற்கும்; பொது நலத்திற்கும் எவ்வளவு நன்மை தீமை செய்திருக்கிறோம் என்று அவர்களே உணர்ந்து எல்லோரும் நல்வழிக் குள்ளாவார்கள். அப்படி ஒழுக்கமாக வாழ்ந்து, பேசி, எண்ணுவதற்குபொது மக்களுக்கு இன்றியமையாத தேவைக்கு வேண்டிய அளவுக்கு உணவுப் பொருள் அடிப்படையாக அவசியமாகிறது. அதற்கு விவசாயம் பெருக வேண்டும்.

பிற்பகல் 4மணிக்கு மேல் எத்தொழிற் சாலைகளிலும் வேலையில்லாமலும் அதிக வெளிச்சமுள்ள விளக்குகள் இரவுகளில் இல்லாமலும் இருந்தால் வியாதிகளே ஏற்படாது.

தன் மதப்பற்றுதலை விடாது அறிவை அறிய முற்படுவோர்களின் கதி ஆடுகளோடு ஒரு வேங்கையைச் சேர்த்து வளர்ப்போன் கதியை போன்றதே.

விவேகம் எதற்கும் எல்லோருக்கும் பயன்படக் கூடியது. அவ்விவேகத்தால் ஆராய்ந்த போது விவேகியை விட விவேகமில்லா மக்களுக்கு எவ்வித மனப்பான்மையோ எண்ணத்தின் வலிவோ இல்லை.

பறக்கும் பறவை தன் கால்களை கெடுத்துக்கொள்ளாதது போல், பணத்தாலும், படிப்பாலும் அவசியமற்ற தொழில்களாலும் எல்லோருக்கும் தேவையுள்ள விவசாயத்தை எக்காரணத்தாலும் எக்காலத்தும் கெடுத்துக் கொள்ளாதீர்கள்.

# மதங்களின் கருத்து

மடபேய், மதபேய், பய பேய், மனபேய் இப்பேய் எல்லாம் மதியுயர விடாபேய் என்று உணர்ந்து தேருவீர் உலகீர்.

ஒவ்வொருவரும் தன் சரீரத்தைப் பாதுகாத்துக் கொள்ளவும் தன்னைப்போல் பிறரை நேசிக்கவும் அன்பு சுகாதாரம், கருணை, அறிவின் விளக்கம், சமத்துவம், உண்டாவதற்காக வேண்டியும், அந்தந்த நாட்டு சீதோஷ் ணத்திற்குத் தக்கபடி அறிவு வளர்ச்சி இல்லா மக் களுக்கு வேண்டிய போதனை, கற்பனை கதைகளோடு உற்சாகப்படுத்தி ஒவ்வொருவரும் நடை, உடை, உணவு, சொல், இருப்பு படுக்கை, இவைகளில் இருக்கவேண்டிய ஒழுக்கங்களை தொழுகையால், ஜெபத்தால், விரதத்தால் யாத்திரையால், பிரார்த்தனையால், யோகத்தால் போதித் ததே மதங்களின் கருத்தாகும். இதை நன்றாய் ஆராய்ந்து பார்த்தீர்களானால் இவற்றின் மூலம் நடைமுறையில் வீட் டில் உள்ள ஒழுக்கம் சுகாதாரம் முதலியவை பயன்பட்டு இருப்பது அறியலாம். இதுவே மதங்களால் ஏற்பட்ட நன்மை. இதை அறியாது மத போதனைகளில் ஏற்படும் குழப்பங்களுக்கு காரணம் என்னவென்றால், மனித வாழ்க் கைக்கு வேண்டிய அளவுக்கு நிரவிவர உணவு முதலிய அவசியப் பொருள்கள் இல்லாததால் இருக்கும் பொருள் களை சேகரிக்க வேண்டிய கூட்டுறவாளர்களை சேர்த்துக் கொள்ளும் செய்கையே தன் தன் மதம் உயர்வு என்று பேசும் குழப்பம் ஆகும்.

## கற்பனை

அந்தந்த சந்தர்ப்பங்களுக்குத் தக்கவாறு கற்ப னையை கற்பித்து விடலாம். ஆனால் அந்தக் கற்பனையை கற்பனை யென்றறிய மக்களுக்கு வெகுகால தாமதமும் பிரயாசையும் ஏற்பட்டு விடுகின்றது. கற்பனையை ஒழிப் போரே வீர விவேகி.

ஆலயம்:—உடல் உழைப்பு களைப்பு நீக்கி நல்ல சிந் தனை ஆராய்ச்சியோடு நிம்மதியாக யிருக்க வேண்டியதற் குள்ள சுகாதார யிடவசதியே ஆலயம்.

### யாத்திரை

ஆராய்ச்சியுடன் அநேக நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதில் தொழிலுக்கு வேண்டிய சீர்திருத்தங்களும், சமத்துவமும், அன்பும், அறிவு, பெருந்தன்மையும் எதார்த்த துணிவும் இவைகளோடு உலக அனுபவமும் யாவும் கிடைக்கின்றன.

ஆராய்ச்சியில்லாப் பணமுடையோர் செய்யும் யாத்திரையால் அவருக்கு யாதொரு பிரயோஜன மில்லாதிருப்பினும் யாத்திரையில் செலவாகும் பணம் மற்றத் தொழிலாளிகளுக்கு நிரவிவருகின்றது. முயற்சித்தும் தொழில் கிடைக்காத எளியவர்களும் தொழிலே செய்ய இஷ்டமில்லாத சோம்பேறிகளும் செலவுக்கு பணமில்லாது செய்யும் யாத்திரையால் பலருக்கும் சிரமத்தை விளைவிக்கின்றார்கள்.

மூட நம்பிக்கையால் ஆலய சமாதி தரிசனத்துக்குப் பணம் செலவழிக்க கூடியவர்கள் செய்யும் யாத்திரையில் அவருக்கும் அவனைப்போன்று விளைவாகும் மக்களுக்கும் அறிவை அடிமைபடுத்தும் மூட நம்பிக்கையை அதிகரிப்பதோடு ஆலயசமாதியின் மூலமாக சம்பாதிக்கக் கூடியவரிடத்தில் தொழில் முயற்சியில்லா சோம்பேறித் தனமும் அறிவுக்கு முறணான ஏமாற்றத் தந்திரங்களும் விளைவாகின்றன.

### உயிர்

அணுக்களின் கூட்டுறவின் வேகமே இரத்தம். இரத்த ஓட்டத்தால் உள்ள ஸ்பரிச உணர்ச்சியின் பிடிப்பே உயிர். தடித்து வளரும் பெரும் மரத்தின் உள் ஈர உணர்ச்சியின் வளர்ச்சிக்குத் தடை ஏற்பட்டவுடன் மரம் எப்படி பட்டு விடுகிறதோ அதுபோல் இரத்த ஓட்டத்தின் வேகம் நின்றுவிட்டால் வேகம், விவேகம், பரிசம் இல்லாது சரீரம் விழுந்து விடுவதற்கு உயிர் இல்லை என்பதாகும்.

இரத்த ஓட்ட வேகத்தாலும் நிதானத்தாலும் சரீர வளர்ச்சியும் தளர்ச்சியும், ஏற்படுவதும் இரத்த ஓட்டத்திற்குள்ள தடைகளால் வியாதிகள் ஏற்படுவதுமாகும்.

நாஸ்திகம் ஆஸ்திகம்:—அறிவுக்கு விளக்கமில்லா நம்பிக்கையுடனும் ஒரே பிடிசாதனையோடும் கடவுளைப்பற்றி பேசுவது ஆஸ்திகம். அதின் தத்துவ ஆராய்ச்சியோடு விளக்கமாய் பேசுவது நாஸ்திகம்.

(1) நம்பிக்கை:—தன் அறிவுக்கும் புரியாது எதையும் நம்புவோர்கள் எதிலும் ஏமாறுவார்கள்.

(2) விசுவாசம்;—எவ்விஷயமும் அறிவுக்கு விளக்கமாக அறிந்து கொள்வதில் ஏற்படும் நன்றி விசுவாசமாக என்றென்றைக்கும் மறவாதும் எந்த இடத்திலும் தாம் ஏமாறாதும் பிறரும் ஏமாற்றத்தில் அகப்படாதும் காப்பாற்றும்.

குற்றம்

விவேகத்தோடுள்ள வேகம் விவகாரமில்லா நன்னடத்தையுடன்
நன்னோட்டத்தையே நாடும்—அதுவால் நாடு செழிக்கும்,
நல் அனுபோக அறிவு பெருகும்.

விவேக மில்லாதார்கள் பெரும் குற்றம் செய்யினும் அது குற்றமே ஆகாது. பெரும்விவேகி ஒரு சிறு குற்றம் செய்யினும் அது பெரும் குற்றமே ஆகும்.

ஒழுக்கமும் சுகாதாரமும் எல்லோரும் அனுசரிக்கவேண்டியது அவசியம்.

யோகமும் விரதமும்:—அதிக உணவு உண்போர்களுக்கும் சரீர உழைப்பு இல்லாதவர்களுக்கும், வேண்டியது விரதமும் யோகமும். நாள் ஒன்றுக்கு சராசரி 4 மைல் நடையுள்ளவர்களுக்கும் 8 மைல் சைக்கிலில் பிரயாணம் செய்வோர்களுக்கும், நெசவு மற்ற சரீர உழைப்பு உள்ளோர்களுக்கும் யோகம் செய்ய வேண்டியதே இல்லை. வேண்டிய உணவுக்கு கஷ்டப்படுபவர்கள் விரதம் வைக்க வேண்டியதே இல்லை.

## உலக சமாதானத்திற்கு வேண்டிய திட்டம்

விவசாயமும் விவேகமும் கூடுதலாய் இருந்தால் சாதிமத பேதக் குரோதப் பிரிவினைச் சண்டைகள் எந்நாட்டிலும் எப்போதும் இராது.

வெட்ட வெளியாயுள்ள அணுமயச் சக்தியே உருவமாகி அவ்வுரு அழிகின்றவரை உலக அனுபவங்கள். உருவாகு முன்னும் அவ்வுரு அழிந்த பின்னும் வெட்ட வெளியே தவிர்த்து வேறென்றில்லை.

பரிணமம்:—உலகத்தில் தாவரங்கள் உண்டாகியதிலிருந்து அதை ஜீரணிக்கக் கூடிய ஜீவராசிகள் உண்டாக வெகு காலம் சென்றது. அதிலிருந்து தாவரத்தில் உள்ள உணவையும் மற்ற ஜீவராசிகளையும், ஜீரணிக்ககூடிய மனிதன் உண்டாகி மனிதனில் அறிவு உண்டாக வெகு காலம் சென்றது. இன்று பெருகிக் கொண்டு இருக்கும் மனிதர்களுக்கு, வேண்டிய தாவரமும், மற்ற ஜீவராசிகளும் குறைந்திருப்பதுதான் எல்லா நாடுகளிலுமுள்ள குழப்பத்திற்குக் காரணம். ஆகையால் உலகில் விளைவாகும் உணவுப் பொருளுக்கு வேண்டிய ஜனத் தொகைக்குமேல் பிறக்க விடாக் (கருவாகுமுன்) கருத்தடை எல்லா நாட்டரசியலிலும் இருக்க வேண்டியது அவசியம்.

கர்ப்பத்தடை:—விவசாயி தவிர மற்ற தொழில்களில் உள்ளவர்களுக்கு இரண்டு குழந்தைகளுக்கு மேல் பிறக்க விடா கர்ப்பத் தடை எல்லா நாட்டிலும் சட்ட ரீதியாக ஏற்படுத்தவேண்டும். ஒரு தேசத்தில் வற்புறுத்தி மற்றொரு தேசத்தில் வற்புறுத்தாமல் விட்டால் போருக்குக் காரணமாகவே முடியும்.

மரியாதை இல்லாத பொருள்கள்:—பொன், வைரம், ரத்தினக் கற்கள், முத்து இவை போன்ற ஆடம்பரப் பொருள்களுக்கு உள்ள மதிப்பு அறவே இருக்கக்கூடாது. இவைகளின் சம்பந்தமான தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்களை உழவு, நெசவு, மற்றப்பயனுள்ள தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும்.

உலக அறிவாளிகளே! பசி, பணம், புகழ் இம்மூன்றுலேயே உலகில் அனுபோக அறிவு கூடியதற்கு மூல காரணமாகும். பெருகிய அறிவை கெடுப்பதற்கும் அறிவே பெருக விடா தடை செய்வதற்கும் காரணமாக இன்று இருப்பதும், அதே பசி, பணம், புகழே யாகும். ஆகையால் இம்மூன்றை ஒழித்து நிர்வாகம் நடத்த முற்பட்டாலே எல்லோரும் க்ஷேமமாயும் சமாதானமாயும் வாழ முடியும்.

போதனை:—உழவின் பயனுள்ள தன்மை, தொழிலின் சிறப்பு, ஆரோக்கியமான வாழ்க்கை, நல்ல நடக்கை, பண்பாடு, இருக்கும் உணவு பொருளையும் அறிந்த அனுபோகங்

களையும் ஒருவர்க்கு ஒருவர் பகிர்ந்துக் கொள்ளும் முறையின் நன்மைகள், ஆராய்ச்சி, பொது அறிவு இவைகளைப் பற்றிப் பொது மக்களின் அறிவை போதித்து வளர்க்க வேண்டும். மத கல்வி போதனை அறவே கூடாது.

மக்களுக்கு தேவையில்லாத ஒழுக்கத்தைக் கெடுக்கும் பல தொழில்களும் நிறுத்தப்பட்டு அத்தொழில்களில் ஈடுபட்டிருப்போரும் இந்த அவசியமான விவசாயமும் மற்றத் தொழிலையும் பெருக்கப்படவேண்டும். இத்துடன் மக்களது மதியை மயக்க சூழ்ச்சியால் தம் ஊதியத்தை உழைப்பின்றி பெறுவோர் தோன்றாது இருக்க பொது மக்களுககு தம்மை பற்றியும் உண்மை தெரிந்து கொள்ளும் விவேகம், ஆராய்ச்சியைப் பற்றியும் அறிவு ஊட்டுதல் வேண்டும்.

நாடுகளின் அன்பு:—ஒரு தேசத்தின் அரசாங்கத்தைப் பற்றியும் ஆட்சி முறையைப் பற்றியும் மதிக்கப்படும் அரசியல் மதிப்பு அந்தந்த தேசத்தின் உணவு உற்பத்தியையும் தொழில் வளத்தையும் பொறுத்ததாக இருக்க வேண்டும் உணவுப் பொருள்களும் கைத்தொழில் பொருள்களும் குறைவுப்பட்ட தேசத்திற்கு குறையில்லாத தேசம் தொழில் வகையில் உதவி செய்யவேண்டும்.

நிதி:—ஒரு தேசத்தின் அரசாங்கம் அதனுடைய பெருமதியான நிதியைப் பொறுத்தவரையில் கஜானாவில் கரென்ஸி நோட்டுகளையே வைத்துக்கொண்டு உணவுப் பொருள்களுக்கும் உழைப்புக்கும் பரிவர்த்தனைக்குப் பயன்படுத்தவேண்டும். உணவுப்பொர்ருள் உழைப்பு மற்ற உற்பத்திச் சக்திக்கு உள்நாட்டிலோ வெளிநாட்டிலோ கொள்ளவும், கொடுக்கவும் பண்ட மாற்றத்திற்கும் தொழிலாளிகளை அனுப்புவதற்கும் உடன்படிக்கைகளைத் தவிர நாணயங்கள் இருக்கக்கூடாது.

யுத்த ஆயுதங்கள்:—உள்நாட்டின் அமைதியை காத்து கொள்ளவோ ஏற்படும் குழப்பங்களைத் தடுத்து அமைதியை ஏற்படுத்திக்கொள்ளவோ இப்போது போதுமான யுத்த ஆயுதங்கள் ஒவ்வொரு தேசத்திலும் இருக்கிறபடியால் எந்தத் தேசமும் யுத்த ஆயுதங்களை இனிமேல் பெருக்கிக் கொள்ளாதிருக்க வேண்டும்.

விவசாயம் பெருக வேண்டும்! விவேகம் வளர வேண்டும்.

## பெருகும்! வளரும் சந்தோஷம்.

பெற்றவரும் தாயல்ல
பாலூட்டியவரும் தாயல்ல
வளர்த்தவரும் தாயல்ல
அறிவை அறிவித்தவரே தாய்.

என் இருதய மலர்களே! சிறிது பெரிது என்ற பேதக மற்ற நானாகிய நினைப்பின் நிறைவில், உங்கள் மேல் உள்ள என் அன்பான எண்ணத்தின் அலை எவர்பேரிலும் இல்லாதிருக்க முடியாது. அனுபவத்திற்கு வேண்டிய அறிவுக்காகவும் கால சந்தர்ப்ப பேதங்களில் அகப்படாது காப்பாற்றவும் குருவின் கண்டிப்பு அப்போதுக்கப்போது மிக அவசியம். அதன்பேரில் உங்கள் விசுவாசமும் அவசியமே.

நடந்ததெல்லாம் பெரும் நன்மையே. சந்தோஷம் ஆயிர ஆயிர கோடியுக காலங்களாய் உள்ள அஞ்ஞானம் ஞானம் என்னும் இவ்விரு பிரச்சனை என் அனுபோக அறிவின் விளக்கத்தால் முடிவடைந்ததின் பயன் இனிமேல் நான் என் உடல் உள்ளவரை ஆறுவயதுள்ள நல்லதொரு பாலகனைப் போல் உள்ள சகஜத்தில் இருந்து கொண்டே என்னிடம் வரும் அறிவாளிகளை தன்னிலே அனுபோக அறிவையும் உணர்வின் இன்பத்தையும் லூட்டுவேன்.

---

குறிப்பு:—இவற்றில் கண்ட எண்கள் இரண்டாம் பதிப்பு. "நான்" என்ற நூலில் உள்ள விரிவுரைகளின் வரிசை எண்களைக் குறிக்கும்.

# உலக சமாதான ஆலயம்

## பரிபூரண பரஞ்சோதியின் உயர்ஞான சபைகளின் விலாசம்.

(1) நலைமை சபை.—உலக சமாதான ஆலயம், ராம் நாட் ரோடு, (மாரியம்மன் தெப்ப குளம் சமீபம்) மதுரை.

(2) மத்திய சபை:—உலக சமாதான ஆலாயம். 299, திருவெற்றியூர் ஐரோடு, புது வண்ணாரப் பேட்டை (டெலி கேட் சமிபம்) மதருஸ்-21

(3) உலக சாாதான ஆலயம், மதுரை ரோடு, அரும் புக் கோட்டை.

(4) வடகரை, பெரிய குளம்.

(5) சிவன் கோயில், மேல ரத வீதி, பாளையங் கோட்டை.

(6) உலக சமாதான ஆலாயம் சின்னாளப்பட்டி, (அம்பாதுரை வழி) சின்னாளப்பட்டி.

(7) 66, தம்பு நாய்க்கன் வீதி, புதுச்சேரி.

(8) C/o S. கிருஷ்ணசாமி நாயுடு, 5-B, கவரை வீதி, பெரிய காஞ்சிபுரம்.

(9) உலக சமாதான ஆலயம், ரூம் நெ. 3, கைலாச வாசம், கச்சேரித் தெரு, விழுப்புரம்.

(10) 88, காட்டன்பெட்மெயின் ரோடு, பெங்களூர் சிட்டி.

(11) C/o ஹிமாலயா சோடா பாக்டரி, பத்ருவதி (மைசூர் ஸ்டேட்)

(12) நெ. 1, சஞ்சீவிராயன் கோயில் வீதி, கடலூர், ஓ. டி.

(13) M. ராமச்சந்திரன், தாமரைகுளம் வடக்கு வீதி, மன்னார்குடி, மன்னார்குடி போஸ்ட், (தஞ்சை ஜி.)

(14) நெ. 4, கங்காதீஸ்வரன் கோயில் வீதி, தோப்புக் கானா, ஆற்காடு, (N. A. Dt)

(15) C/o வைசிய சமாஜம், குப்பம், (சித்தூர் ஜில்லா).

(16) கள்ளிப்பட்டு கிராமம், நீர்வள்ளூர் போஸ்டு, (காஞ்சிபுரம் வழி), (செங்கற்பட்டு ஜி.).

(17) 14, மானம் பார்த்த ஜமேதார் வீதி, கொசப் பேட்டை, வேலூர் (N. A. Dt)

(18) C/o ஷண்முகம், கார்கோ இன்ஸ்பெக்டர், (மதுரா கம்பெனி) தனுஷ்கோடி.

(19) C/o பரஞ்ஜோதி ஸ்டோர், பசார் வீதி, வத்ருப்பு (ராமநாதபுரம் ஜி.)

(20) 1983, சக்க நாய்க்கர் வீதி, தஞ்சாவூர்.

(21) உலக சமாதான ஆலயம், 132, மெசஞ்சர் வீதி, கொலும்பு, சிலோன்.

(22) முல்லிக் கும்மை: வெள்ளை குட்டை போஸ்ட், (வாணியம்பாடி அருகே) (N. A. Dt.).

(23) C/o நடேச முதலியார், வளையாத்தூர் கிராமம், தாமரை பாக்கம் போஸ்ட், (N. A. Dt.).

(24) சாத்தம்பாக்கம், ஊமராபாத் போஸ்ட், (ஆம்பூர் வழி) (N. A. Dt.).

(25) குருசாமிபாளையம், சேலம்.

(26) C/o V. வெங்கட்டராமய்யர் BALT-பெரிய தெரு பட்டுக் கோட்டை.

(27) ஒண்டிபுதூர், சிங்க நல்லூர் போஸ்ட், (கோயம் புத்தூர் ஜி.).

(28) ரெட்டிமாங்குப்பம், மேல்பட்டி போஸ்ட், குடியாத்தம் தாலுகா (வ. ஆ. ஜி.).

(29) S. D. பாலஸ் C/o இருளப்பன், 508, புக்கிட் டேமா ரோடு, சிங்கப்பூர்.

(30) வைரிசெட்டி பாளையம், கொப்பம்பட்டி போஸ்ட் (திருச்சி ஜி.).

(31) C/o ஞானபிமானி பிரஸ், காரைக்கால்

(32) No. 94, விக்டோரியா எக்ஸ்டென்ஷன் ரோடு, தூத்துக்குடி,

(33) 11, பாபு செட்டி வீதி, புத்தூர், திருச்சி.

(34) 20, போலீஸ் ரங்கசாமி நாயுடு தெரு, புத்தூர், திருச்சி.

(35) சீதாராமையய்யா செட்டி தெரு, பிச்சானூர் குடியாத்தம் போஸ்ட்.

(36) C/o எகாம்பரம், ராமநந்திர்த் மண்டலி, பழைய மட்போர்ட், சிக்கந்தரா பாத், டெக்கான்.

(37) 145, சிராக் அலிலேன், சிக்கந்தரா பாத், டெக்கான்.

(38) சக்கரைப் படுத்துரை, கும்பகோணம்.

(39) C/o ஸடேஷன் மாஸ்டர் பொள்ளாச்சி.

(40) செங்குட்டை, காட்பாடி.

(41) புதுக்காப்பி ரஸ்தா, விஜயபுரம், திருவாரூர்.

(42) C/o சினிவாசராகவன், "கல்வி மன்றம்" திண்டிவனம்

(43) நடுமுதலேக் குளம், வளந்தூர் போஸ்ட், திருமங்களம் தாலுகா, மதுரை ஜில்லா.

(44) C/o B. அப்பாராவ், சப் இன்ஸ்பெக்டர் (D. I. B.) ஓல்ட போஸ்ட் ஆபீஸ் ரோட், நெல்லூர்.

(45) நாதமுனி சத்ய நாரயணகாரு, ஆயூர்வேதிக் டாக்டா, மம்தாம்பெட், ஜகன்ஞதபுரம், காகினடா.

(46) உடன்குடி, கிரிஸ்டியா நகரம் போஸ்ட், திருநெல்வேலி ஜில்லா.

(47) C/o சுப்பையா பிள்ளை, பெடி ஆபீஸர், சேனூர் பேக்டரி, ஆறுமுகநேரி போஸ்ட்

(48) C/o . பாலசுப்ரமணியம், (உபாத்தியாய தெரகு ரத வீதி, வீரவநல்லூர், திருநெல்வேலி ஜில்

(49) C/o அங்குசாமி, மண்டபம், தென்னி

(50) கருப்பட்டி போஸ்ட், மட்டப்பாரை.

23-9-50

ஞானவள்ளல் பரஞ்சோதி மகான் அருளிய 'எந் நூலுக்கும் இந்நூலே மூலம்' என்னும் கீழ்கண்ட புத்தகங் கள் இதன் கடைசி பக்கங்களிலுள்ள விலாசங்களிலும், சுதேசமித்திரன், ஹிக்கின்பாதம்ஸ் புத்தக ஸ்டால்களிலும் கிடைக்கும்.

1. 'நான்' —தமிழ், ஆங்கிலம்
2. 'கடவுள்' —தமிழ், ஆங்கிலம், தெலுங்கு
3. உணர்வும் தவக்கனலும் தமிழ்
4. பரஞ்சோதி ஞானக்கண் ,,
5. ஆரூதாரமும் அமிர்தமும் ,,
6. ஒரு மொழியும், ஆதியும் உலக இணைப்பும்
7. பூதலோகம் ,,
8. பேரறிவு ,,
9. ஒருமொழி, பரஞ்சோதி, பேரறிவு ஞானக்கண் —தெலுங்கு



Rajan Electric Press, Madras-1.